

ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்

# குறள் முழக்கம்



திருவள்ளுவர் ஆண்டு-2053 தை-27 பொ.ஆ.2023- பெப்புருவரி-10

உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகம் வெளியிடும் இலவச இணையத் திங்களிதழ்

## வையகமெங்கும் வள்ளுவம் பரப்பும் பெருங்கவிக்கோ வா.மு.சே.அவர்களுக்குப் பிறந்தநாள் பெருமங்கலம்.



எட்டுத் திசையும் புகழ்மேவும் பாவலர்க்கு

எண்பத்தெட்டு ஆண்டு நிறைவு!வாழ்த்துகின்றோம்.

ஆண்ட நாள் ஆண்ட பாண்டியன் போலவே
நீண்டு உயர்ந்த நெடிய தோற்றம்;
சீரிய தோற்றம்; நேரிய சிந்தை;
கூரிய மதிநலன்; நினைவெலாம் தமிழ்நலன்;
குழந்தை போன்றே குமிழிடும் முறுவலன்;
நாடு சமயம் கட்சி என்னும்
வரம்புகள் தகர்த்தே அன்பரைப் பெற்றவன்;
ஒவ்வொரு நொடியும் ஒண்டமிழ் நலனே
செவ்விதிற் காக்கச் செயற்படும் மறவன்;
அன்னைத் தமிழ்நலன் போற்றிடும் பணியில்
ஆட்சி பயிற்சி அனைத்துத் துறையிலும்
மாட்சி பெற்று மாத்தமிழ் சிறந்திட
வாழ்நாள் எல்லாம் வருந்தி உழைப்பவன்;
உரிமை அடைந்திட உயர்தமிழ் சிறந்திட
பெருமிதம் பொங்கிடப் பெருநடைப் பயணம்
சிறப்புடன் நடத்திடும் சீர்மை மிக்கவன்;
ஒண்டமிழ்க் கவிநலன் உலகோர் போற்றிட
உலகெலாம் வலம்வரும் ஒப்பிலாச் சிறப்பினன்;
தமிழின் தலைமைப் புலவன் என்பதால்
அமிழ்தத் தமிழால் போற்றி வணங்குவேன்;
உரிமை மக்களும் உயர்புகழ்ச் சுற்றமும்
வையை யாற்று மணலினும் பன்னாள்
வாழிய! வாழிய! வண்டமிழ் போன்றே!

---மறைமலை இலக்குவனார்



## தமிழர் திலகம், மருத்துவர் சோம.இளங்கோவன் வாழ்த்துகிறார்

### வாழ்த்திடுவோம் உயர் தமிழர் வா.மு.சே. !

பரம்பரையின் பெருமை உண்டு
பண்பாட்டின் சிறப்பு உண்டு
பழகுவதோ எளிமை என்றும் !
பள்ளி ஆசிரியர் பணி தொடங்கி
பாரெல்லாம் தமிழ் பரப்பி
கவியரங்கம் செல்லா நாடில்லை !
உலகத்தமிழர் நன்கறிந்த நாயகனே
வ மு சே பேர் சொன்னால்
வாழ்த்திடுவோர் பலருண்டு !
தமிழே வாழ்வென்றாய்
தளராது உழைத்திட்டாய்
தரணிவாழ் தமிழரெல்லாம்
தலைவணங்கி வாழ்த்துகின்றோம்
வாழிய பல்லாண்டு ! வாழிய பல்லாண்டு !

- சோம .இளங்கோவன் .











வாழி வா.மு.சே

-----------------



நெடிதுயர்ந்த பாண்டியன்போல் நிமிர்ந்த தோற்றம்!
நெடும்பயணம்! நேருழைப்பு! தமிழின் ஏற்றம்!
கடிவாள மில்லாத கவிதைக் காற்று!
கணக்கில்லாப் பேரன்பின் கருணை யூற்று!
மடியில்லாத் தொண்டறத்தான்! கவிஞர்க் கெல்லாம்
மடிகனத்த தாய்மனத்தான்! பலபேர் ஏறப்
படியமைத்த தமிழ்ப்பணியார் பெருங்க விக்கோ!
*
பகைவர்க்கோ சுடுநெருப்பு! தமிழ்ப்பேச் சென்றால்
பனிக்குளிர்ச்சி தருசிரிப்பின் மிகைநெ கிழ்ச்சி!
நகைப்பில்லா நரம்புகளின் துடிப்பெ ழுத்தில்
நங்கூரம் தோற்றோடும் உறுதிப் பாடு!
முகையவிழ்த்த நந்தவனக் காற்றைப் போல
முன்வந்து தானணைக்கும் பனிக்கூழ் வெள்ளம்!
வகைவகையாய் வாய்த்தவர்யார்? நாம்வி ரும்பும்
வா.மு.சே. வளத்தமிழின் பெருமைக் கோடு!
*



இடைநில்லாப் பேருந்தாய்ப் போராட் டங்கள்!
ஈரத்தீ ஈர்க்கின்ற  ஆர்ப்பாட் டங்கள்!
கிடையாது எனச்சொல்லா மனவோட் டங்கள்!
கீழிறங்கத் தெரியாத தன்மா னங்கள்!
உடையாத கண்ணாடி உளத்தாங் கல்கள்!
ஊருக்கே உழைப்பதென்ற உறுதிப் பொங்கல்!
விடையாகச் சொல்வதெல்லாம் தமிழ்வ ளர்க்கும்
வா.மு.சே என்பதன்றி எவரி ருக்கும்?
*

எனைக்கவிஞன் எனவேற்ற கவிமு தல்வன்!
எழுத்துக்குள் எரிமலைகள் வைக்கும் பேனா
முனைக்கவிஞன் வசந்தராசன் எனைக்கூர் தீட்டி
முன்வைத்தோர் பலரிலிவர் மூலத் தானம்!
திணைச்சிறிதைப் பனையாக்கிப் புகழ்ந்தே ஏத்தித்
திறமைகட்கு உரம்போடும் திண்மை யாளன்!
இணையில்லாத் தமிழ்த்தொண்டர் வா.மு.சே.தான்
இமயம்போல் உயர்வுபெற்றே இனிது வாழி!
*



வாழ்த்துகளுடன்,

**கவிக்கோ துரைவசந்தராசன்.**






தமிழுக்கு நடைப் பயணம்

--உதயை மு.வீரையன்



எத்தனையோ சோதனைகள் வந்த போதும்
எழுச்சியுடன் எதிர் கொண்ட எங்கள் தாயே!.
முத்திரைகள் நீ பதித்தாய்! முடித்தும் வைத்தாய்!
முன்னேறிச் செல்கின்றாய் வாழ்ந்து கின்றோம்
சித்தர் சுளும் ஞானிகளும் புலவர் எல்லாம்
செய்துதந்த அணிகலன்கள் ஒன்றி ரண்டா?
அத்தனையும் தமிழுக்குச் சிகர மாகும்.
அதை மறந்தால் தமிழர்க்கு வாழ்வே இல்லை!



சங்கத்தில் நீ செழித்தாய்!. அதனைக் கொண்டே
சரியான செம்மொழியாய் வாழு கின்றாய்!
எங்கெல்லாம் தமிழர்கள் இருக்கின் றாரோ
இடம் தேடி உனைவைத்து வணங்கு கின்றார்
அங்கெல்லாம் உன் பெருமை பாடு கின்றார்
ஆடுகின்றார் தேடுகின்றார் நாடு கின்றார்
இங்கு மட்டும் உன்பெருமை அறிய வில்லை
என்றாலும் அதற்கொருநாள் வந்தே தீரும்.



யாருக்கு எதுவேண்டும் என்ப தெல்லாம்
எங்களது தாய் அறிவாள் நெரிந்து செய்வாள்
நேருக்கு நேர் நிற்கத் துணிவில் லாதார்
நிலையற்ற இந்தியினைப் புருந்து கின்றார்
வேருக்கு நீர்பாய்ச்சி வாழ வைப்போம்
வெற்றிக்கே என்றென்றும் துணையாய் நிற்போம்

போருக்கு நாம் அஞ்சி நின்றதில்லை
புகழுக்கே நாம்வாழ்ந்த வரலா றுண்டு.



மொழிக்காக உயிர்நீத்த வரலா றெங்கே?
முடிமன்னார் மடிவாழ்ந்த காலம் எங்கே?
பழிவந்தால் உயிர்துறந்த மறவர் எங்கே?
பகை முடித்துக் கொடிபிடித்த படைகள் எங்கே
வழிவழியாய் நாம்வந்த வாசல் எங்கே?
வாழ்வையே காவியமாய் வடித்த தெங்கே?
இழிவகற்ற பெருங்கவிக்கோ நடந்த காதை
என்றென்றும் நிலைத்திருக்கும், வாழ்த்து கின்றேன்.



நடக்கட்டும்.....

கலைமாமணி ஏர்வாடி சு.இராதாகிருட்டிணன்



சர்க்கரையைக் கரைப்பதற்கு
நடப்போருண்டு
சர்க்காரைக் கவிழ்ப்பதற்கும்
நடப்போருண்டு
மொழிப்பற்றை வளர்ப்பதற்கு
நடப்போருண்டா?
இருக்கின்றார் எங்களுடன்
பெருங்கவிக்கோ!
இவர் பெரியார் – அண்ணாவின்
வழிநடப்பார்
இருவர்தம் வழிநடந்த
கலைஞர்கூட
இவருக்கு முன்னோடி
என்றாலென்ன



இடையிடையே சபரிக்கும்
கால் நடக்கும்.
இன்முகத்தின் பெரும்பகுதி
மீசையென்றால்
இவர்மனத்தின் மிகும்பகுதி
தமிழேயாகும்.
யாருக்கும் தலைசாய்ந்து
பார்த்ததில்லை
ஊருக்குள் இவர்போன்று
உழைப்போரில்லை.



காருக்குள் இருந்துகொண்டே
நடைப்பயணம்
பேருக்கு நடத்துவோர்கள்
பலர் நடுவே
காலுக்கும் அணியின்றி
நடந்து தேய்ந்த
கவிஞருக்கு உலகமெல்லாம்
உறவேயாகும்.

வாழ்க பெருங்கவிக்கோ வா.மு.சே.!

- சு.குமணராசன், மும்பை

அகவை 88 எனினும் அன்றும் இன்றும் அதே துடிப்புடன் இயங்கும் ஒரு தமிழ்க் காவலர் ஐயா வா.மு.சே அவர்கள். பெருங்கவிக்கோ என்று உலகத் தமிழ் மக்களால் அழைக்கப் படும் வா.மு.சே அவர்களுடனான தொடர்பு சற்றொப்ப 37 ஆண்டுகளுக்கு முன்பே ஏற்பட்டது.



பன்னாட்டுத் தமிழுறவு மன்ற நிகழ்ச்சிகள் பல்வேறு நாடுகளில் ஏற்பாடு செய்யப்பட்டு நடைபெறும்போதெல்லாம் அமெரிக்கா, கனடா மற்றும் ஐரோப்பிய நாடுகளுக்குச் செல்கையில் பெருங்கவிக்கோ மும்பை வந்து தான் வானூர்திப் பயணம் மேற்கொள்வார். அப்போதெல்லாம் பம்பாய்த் திருவள்ளுவர் மன்றம் வந்து திரு தேவதாசன் அவர்களிடம் அளாவளாவிச் செல்வார். அப்போதிலிருந்து தான் நானும் அவருக்கு அறிமுகம் ஆனேன்.

அவருடன் பலர் குழுவாகச் செல்கையில் மும்பையில் பல நேரங்களில் யாம் உதவி செய்திருக்கிறோம். 1990 களில் என் பணியின் நிமித்தம் பல்வேறு நாடுகளுக்கு நான் பயணம் செய்த போது செருமனி, பிரான்சு, துபாய், சிங்கப்பூர் ஆகிய நாடுகளில் உள்ள தமிழ் ஆர்வலர்களைப் பற்றி அவர் மூலமாகவே அறிவேன். எந்த நாட்டிலிருந்து எப்போது அவரை அழைத்தாலும் உடனே அவர் அந்த நாட்டில் நம் கொள்கை உணர்வு மிக்க தமிழர் பெயரைச் சொல்லி அவரிடம் செல்லுங்கள் என வழிகாட்டுவார். எல்லோரும் நலமாக வளமாக வாழ வேண்டும் என்பதை நோக்கமாகக் கொண்ட பெருந்தகை பெருங்கவிக்கோ ஆவார். அவர் ஆசிரியராகத் தொடங்கிய “தமிழ்ப் பணி” இதழ் பல்லாண்டு காலமாக இன்று வரை எம் இல்லம் வந்து சேருகிறது.

பிற்காலத்தில் அவர் மும்பை வந்த போதெல்லாம் எங்கள் இல்லம் வந்து உறவாடி எம்மை வாழ்த்திச் செல்லத் தவறியதில்லை. அண்மையில் பெருங்கவிக்கோ அவர்களை சென்னை புத்தகத் திருவிழாவில் சந்திக்கும் வாய்ப்புப் பெற்றேன். பழைய நினைவுகளைப் பகிர்ந்து அளாவளாவி மகிழ்ந்தோம். பெருங்கவிக்கோ அவர்களின் நெடிய வாழ்வும் வளமும் தமிழுக்கு உரமாக அமையும். அய்யா அவர்களை வாழ்த்தி மகிழ்கின்றோம். தமிழும் நாமும் வேறல்ல! தமிழே நம் வேர்!



**பெருங்கவிக்கோ வா.மு.சேதுராமன் எண்பத்து எட்டாமாண்டு**

*********

நற்றமிழோங்கு நடைப்பயணம்' நயமான நூலொன்று

எண்பத்து எட்டென்று எண்ணிக்கை சொல்கிறது

இன்பத்துச் சுவடெனவே இடயிடத்தி லிட்டவராய்

சிந்தைதனைச் சீராக்கி செம்மாந்த கவியுடைத்து

விந்தைபல புரிவதனை வியந்தேயான் பார்க்கின்றேன்

துன்பத்து நாட்களினைத் துடைத்தெறிந்து தமிழ்கற்று

துயரத்தின் நிலையுடைத்து தமிழுக்கு வலுசேர்க்க

பதின்பருவ இளையோரும் படுத்துறங்கித் திரிகையிலே

பாரெங்கும் பயணமிட்டு 'பா'வழங்கும் பைந்தமிழே!

அசைந்தாடும் மீசையிலே அனல்பறக்கும் உரைவீச்சில்

புறத்துணர்வில் அகத்தழகு பீறிட்டு எழுகிறது

இடித்துரைத்து எழிலூட்டும் இளமையெனத் துடிக்கிறது

குணக்குன்றே! கவியழகே! குறைவில்லா அருட்சுடரே!!

இசைக்கின்ற இசையாகி இமைக்கின்ற அசையாகி

எண்ணத்துப் பூவெடுத்து எழிலார்ந்த மாலையாக்கி



கிண்ணத்து அமிழ்தமென கொஞ்சுமொழி தமிழாய்ந்து
வண்ணத்துப் பறவையென வகைக்கொன்றாய் வழங்குமுமை

கரமற்ற மனிதருமே கரம்கூப்ப விழைகின்றார்
தேன்பாகே செம்மலரே தண்டமிழாம் வண்டமிழே
எண்ணுகிறேன் வரிகளினை எண்ணாமல் களைக்கின்றேன்
படைத்திட்ட படைப்பான பைந்தமிழில் திளைக்கின்றேன்

காலத்துச் சுவடெல்லாம் ‘கால்’சுவடாய் ஆக்கிவிட்டாய்
'பா'வடித்த கரமுடைத்து பாதையெலாம் தடமுடைத்த
பாவேந்தாய் நிற்கின்றாய் பகல்நிலவாய் ஒளிர்கின்றாய்
கால்முளைத்த பிள்ளையெலாம் கைத்தாங்கி நடக்கையிலே

காலத்தைத் தூக்கிட்டு கக்கத்தில் வைத்திட்டு
வேற்றுமொழி பேசிட்டு வேற்றுவனாய் திரிவோர்க்கு
வேல்விழிப் பார்வையிலே விரட்டுகின்ற வேடனென
மொழிவாழ இடையூறாய் மண்ணதனில் இருப்போரை

எதிர்க்கின்ற ஆற்றலினை எண்ணித்தான் வியக்கின்றேன்

கவிதையாய் புதினமாய் கட்டுரையாய் நாடகமாய்
நூற்றுக்கும் மேற்பட்ட நூல்களெனப் படைத்திட்டு
தமிழ்க்காத்து தரணியிலே தடம்பதித்த நல்லோராய்

போகாத நாடில்லை புழங்காத இடமில்லை
ஆகாத செயலில்லை அறியாத சொல்லில்லை
தொய்வின்றி ஆற்றுகிற 'தமிழ்ப்பணியில்' சோர்வில்லை
உலகத்து நாடெல்லாம் ஓய்வின்றிப் பலமுறையும்

ஓடோடித் தமிழுக்காய் உழைக்கின்ற நன்முத்தாய்
செம்மாந்த அறிவோடு சிந்தைமிகு உணர்வோடு
காலமெலாம் தனையீந்து தமிழுக்குத் தகைமையிட
கருத்தாழச் சிந்தனையும் கவிமாலைப் பொன்மலரும்

படைக்கின்ற கரத்திற்கு பார்போற்றும் வணக்கமதை
இனிக்கின்ற நினைவோடு இதயத்து மகிழ்வோடு
உளமாறச் சொல்வதுதான் உயர்வெனவே நினைக்கின்றேன்
'பெருங்கவிக்கோ' பெயருடைத்த பேரன்பு ஐயாவிற்கு



வா.மு.சே என்றழைத்து வளமான உயர்வூட்டி
முத்தான மூன்றெழுத்தால் மாண்பளித்து மகிழ்கின்றார்
வசந்தத்தின் மணங்கமழ வாஞ்சையுடன் அழைக்கின்றார்
மூன்றெழுத்து அடையாளம் முக்கனிகள் இனிப்பூட்டும்

காலங்கள் கடந்தாலும் காவியமாய் மகிழ்வூட்டும்
பன்னற்ற படைப்புவழி பகிர்கின்ற படைப்புதனில்
'சேதுகாவியம்' பெற்றிட்ட செம்மைமிகு வரவேற்பும்
சிந்தைகுளிர் மகிழ்வுடைத்து செறிவான ஊற்றுடைத்து
களைப்பின்றிப் படைத்திட்டு பன்னாட்டுத் தமிழர்க்கும்
பாங்கோடு கொணர்கின்ற பண்புநெறி இலக்கியத்தின்
தொய்வில்லாத் தொடர்ச்சியாக தமிழன்னைக் கணிசெய்ய
'நற்றமிழோங்கு நடைப்பயணம்' நயமான நூலொன்று
நானிலத்து மகிழ்வூட்ட நாளெல்லாம் தமிழூட்ட
பன்னாட்டுத் தமிழுறவு போற்றுகின்ற மன்றமுடன்
அனைத்துத் தமிழ் அமைப்புகளின் கூட்டமைப்பும்
வாழ்கவென வாழ்த்திடுதே வாழ்வாங்கு வாழியவே!

சிங்கப்பூரின் மூத்த தமிழறிஞர் முனைவர் சுப.திண்ணப்பன் அவர்கள் வாழ்த்துகிறார்.:
“பெருங்கவிக்கோ அவர்களுக்குப் பிறந்தநாள் பெருமங்கல வாழ்த்துகள். அன்னாரது தமிழ்ப்பணியால் உலகத் தமிழர் நலம் ஓங்கும் என்பதில் ஐயமில்லை.வாழ்க.”

*பாவரசு வதிலை பிரதாபன்

தலைவர், மராத்திய மாநிலத் தமிழ் எழுத்தாளர் மன்றம்,மும்பை.







சென்னையில் ஞாயிற்றுக்கிழமை பன்னாட்டு தமிழுறவு மன்றம் மற்றும் உலகத் தமிழ் அறக்கட்டளை நடத்திய விழா
'சேதுகாப்பியம்', 'வையகச் சமத்துவ உயர்நிலைக் காண்டம்', 'உலக அமைதி ஒளிநிலைக் காண்டம்' ஆகிய நூல்க
சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி அரங்க. மகாதேவன் வெளியிட விஜடி வேந்தர் ஜி. விசுவநாதன் பெறுகிறார்.
உடன் (இடமிருந்து) வாஷிங்டன் வளாகத்தின் உலக தமிழ் அறக்கட்டளை காப்பாளர் கவியரசன், இலக்கிய புரவல
ரூஸ்வெல்டு, மேற்குவங்க முன்னாள் கூடுதல் தலைமைச் செயலர் கோ.பாலசந்திரன், பன்னாட்டு தமிழுறவு மன்
இயக்குநர் வா. மு. சே .திருவள்ளுவர், நூலாசிரியர் வா. மு.சேதுராமன், பேராசிரியர் மறைமலை இலக்குவனார்,
பேராசிரியர் மருதநாயகம், பேராசிரியர் வா. மு. சே. ஆண்டவர்.

**வெல்க பெரும்புலவரின் தமிழ்ப்பணி முயற்சிகள்**



---கவிஞர் பொன்னடியான்

‘தமிழ்ப்பணி’யே தன் தலையாய பணியாக எண்ணி ஓயாது ஓடி ஓடி உழைத்திருப்பவர் பெரும்புலவர் வா.மு.சேதுராமன் அவர்கள்.அன்புநெஞ்சத்திற்குச் சொந்தக்காரர் இவர்.

அவர் இதழைத் தொடங்கியபோது நம் முல்லைச்சரம் இதழில் வாழ்த்தி வரவேற்றோம் என்பது மறக்கமுடியா உண்மை!எண்ணற்ற நண்பர்களை அன்பர்களை அவர் உலகெங்கும் பெற்றுள்ளார்.அவர்தம் எண்பத்தெட்டாம் அகவையிலும் இளைஞராகச் செயல்படுவது நாம் அனைவரும் அறிந்த உண்மை.

அப் பெரும்புலவர் மேலும் பல்லாண்டுகள் நலமுடன் வாழ்ந்து வெற்றிநடைபோட நெஞ்சார வாழ்த்துகிறோம்.வெல்க அன்னார் தமிழ்ப்பணி முயற்சிகள்!

அன்பன்,

பொன்னடியான்



**பெருங்கவிக்கோ பெருமிதத்துடன் போற்றும் இரண்டு ஆசான்கள்**



செந்தமிழ் அரிமா சி.இலக்குவனார்



ஆய்வுமேற்பார்வை புரிந்த பேராசிரியர்ந.சஞ்சீவி

**வாழ்வாங்கு வாழும் வண்டமிழ்ப் பேராசான் வா.மு.சே' புகழ்வாழ்க!**

**--கவிஞர் மோ.மைக்கேல் பாரடே**





மூன்றாய் மலர்ந்த முத்தமிழ் உலகில்
மூன்றெழுத்துகளால்தன் மூவாத புகழைச்
சிலை யெழுத்துகளால் செதுக்கிச் சிறந்த
விலை மதிப் பற்றநம் வித்தகச் சான்றோன்
வாமுசே எனும் வண்டமிழ்க் கோமான்
வாழுங் காலத்து வாழ்கின்ற பெருமையொடு
வாழ்வாங்கு வாழும்அவ் வள்ளலை வாழ்த்துவோம்!
பெருங்கவிக்கோ எனும் பெருமைக் குரியவரின்
பெயருக்குள் ஓர் உண்மையைக் காண்கிறேன்.
வாழ்வை எனைப் போல் வாழ்ந்தால், என்றும்
முன்னேற்றம் உம்மைச் சேரும் என்கிறார்
அயரா உழைப்பின் இவ் அதிசயப் பிறவி
அவளியில்பலரும் பெயரறியாததோர்
சிற்றூர் தனிலே எளிமையாய்ப் பிறந்தார்
ஏழ்மையில் வளர்ந்தார்! எதற்கும் தளராது
தன்னுழைப் பாலே தாய்த்தமிழ் அமுதை
ஆர்வமாய்ப் பருகி அறிவும் ஆற்றலும்
சேர்த்துக் கொண்டார் செந்தமிழ்ப் புலவராய்!
பள்ளி ஆசிரியராய்ப் பணிசெயத்தொடங்கினார்!
பத்தோடு பதினொன்றாய் அத்தோடு நிறுத்தாது?.
எப்படித் தான் இவர் இப்படி வளர்ந்தார்?
உலக மொழியாம் ஆங்கிலம் தனையும்
சரளமாய்ப் பேசிடச் சிரத்தை கொளாது
ஓயாதுருளும் உலக உருண்டைக்கே.
சவால்விடும் வண்ணம் அவ்வுலக உருண்டையை
பன்முறை சுற்றிப் பிரமிக்க வைத்திடும்
சாதனைச் சரித்திரம் சொல்லி மாளாது!






தொண்ணூறதனைத் தொட முயல்கின்றார்
வெள்ளிப் பனிமலை தனை நினைவுறுத்தும்
சென்னிச் சிறப்பொடு இன்னும் சுழல்கிறார்
காவியம் படைக்கிறார் கட்டுரை வரைகிறார்
சிற்றிதழ் நடத்துவார்! பெருமாநாட்டுப் பேரரங்குகளில்
ஆய்வரை நிகழ்த்துவார்! அருங்கவி முழக்கம்
ஓய்விலா துரைக்கிறார்! ஒழிவிலா துழைக்கிறார்!
இந்த உலகின் எந்த மூலையிலோ
இந்திய நாட்டின் எந்த முடுக்கிலோ
அன்னைத் தமிழுக்கோர் அவலம்வந்துற்றால்.
தன்னொடு படையொன்றைத் திரட்டி நடக்கிறார்
உற்ற உடன்பிறப்பு தமிழன் இடர்ப்படின்
ஊண் உறக்கம் துறந்து ஓடத் துடிக்கிறார்
அனைத்து மாந்தரையும் அருந்தமிழாலே
ஒருகுடைக் கீழே உறவில் இணைக்கப்
பன்னாட்டு றவு மன்றம் காண்கிறார்
ஐயன் திருவள்ளுவரைப் பாடுவார்
ஐயப்பன்மேலும் பாமாலை சூடுவார்.
உயர்தமிழ்ஞானி தாயுமானவர்க்கும்
அண்ணல் காந்தியையும் அறிஞர் அண்ணாவையும்
வீரத்துறவியாய்க் காமராசரையும் வித்தக
முத்தமிழ்க் கலைஞர் கோவையும்
பாமாலை சூட்டிப் பாராட்டிப் போற்றிச்
செய்யாத பணியில்லை நெய்யாத பாவில்லை!
ஐயாவின் புகழ் இன்னும் விரிப்பதற்குச் சொல்லில்லை!
ஊறுதமிழ்க்கும் தமிழர்க்கும் அண்டாமல்
நூறைக் கடந்தும் நின்செயல் தொடரும்!
ஆயிரமாய்ச் சிறப்புகள் நீர டைவீர்!உறுதி!
கோடியாய்த் தமிழர் நினைப் போற்றுவர்!
வாழி பெருமகனே!வளர்தமிழ்த் தலைவனே!







வாமுசே வாழ்க!---**தமிழியலன்**

நடக்கின்ற நற்றமிழே! நல்லுரிமை கேட்டுப்
படர்கின்ற நீள்கொடியே! பாரில் தமிழ்த்தேர்
வடம்பிடிக்கும் சீர்கவியே! வாமுசே என்னும்
சுடர்மணியே! வாழ்கவெற்றி சூழ்ந்து!



## தமிழ் காக்கும் நடைக்கொரு  பெருங்கவிக்கோ



-பேராசிரியர் ப.மகாலிங்கம்

மொழிகள்புல முதல்வர், வேல்சு பல்கலைக்கழகம், சென்னை

பெருங் கவிஞர் கம்பர்தம்
காப்பியத்தில் வந்ததுவோ
சேது பந்தனக் காட்சி...!
பெருங்கவிக்கோ தம்
தீந்தமிழ்ப் பந்தத்தால்
தந்ததுவோ
'சேது காப்பிய' மாட்சி..!
உலகத் தமிழுறவு காத்திட
சான்றாண்மைக் கோ யாருளரோ?
என்றிடில்,
தமிழ் மறவர் மூப்பிளைஞர்
நம் பெருங் கவிக்கோ
இருக்கின்றார் என ஊரே
முழங்கும்..!
எண்பத் தெட்டினை எட்டிய
நாளிலும் அட்டியிலாது
தன் தமிழ்த் தரணியில் ஓங்கி
உச்சம் தொட்டிட
நாளும் நடந்திடும்
நெடும் பயண நாயகராம்
பெருங்கவிக்கோ சேதுராமரே
உலகளக்கும் பெருமான்...!



கவிஞர் வேணு.குணசேகரன் அவர்களின் பெரம்பூர் எழில் கலை மன்றத்தின் சார்பில் அறிவியல் அறிஞர் மணவை முச்தபா அவர்கள் இல்லம் சென்று பாராட்டுப் பாட்டரங்கம்

**பெருங்கவிக்கோ வா மு சேதுராமன் வாழ்த்துச் செய்தி** – மன்னர் மன்னன் மருதை,மலேசியா



செந்தமிழேஉயிரே! நறுந்தேனே!
செயலினைமூச்சினைஉனக்களித்தேனே!
நைந்தாயெனில்நைந்துபோகுமென்வாழ்வு
நன்னிலைஉனக்கெனில்எனக்குந்தானே! (பாவேந்தர்)

அய்யா பெருங்கவிக்கோ வா மு சேதுராமன் அவர்களுக்குச் சிறப்புச் செய்கின்ற வகையில் வெளியிடப்பெறும் குறள் முழக்கம் சிறப்பு மலருக்கு வாழ்த்துச் செய்தியை வழங்குவதில் மட்டற்ற மகிழ்ச்சி அடைகின்றேன்.இதனை என் வாழ்வின் பெரும்பேறாகக் கருதுகின்றேன்.
அய்யா பெருங்கவிக்கோ வா மு சேதுராமன் அவர்கள் தமிழினத்தின் மீதும் தமிழ்மொழியின்பாலும் தீராத பற்றும் உணர்வும் கொண்ட பெருந்தகையாளர்.



*எந்தன் இனத்தை ஒன்றுசேர்க்காமல்-*
*இறுதி எமக்கு வராது*
*எந்தன் மொழி உலகை ஆளாமல் –*
*எந்தன் உயிரும் போகாது*
*தமிழா சாதியை மற – தமிழை நினை*
*தமிழா கட்சியை மற – தமிழை நினை –*
*தமிழா மதத்தை மற – தமிழை நினை*

என்ற தாரக மந்திரத்திற்கேற்ப வினையாற்றி வருபவர். 1976ஆம் ஆண்டு,அய்யா பெருங்கவிக்கோ வா மு சேதுராமன் அவர்கள், அவருடைய ஆசான் சுவாமி இராமதாசரை மலேசியாவில் சந்திக்கிறார். தமிழ்நாடு திரும்பியதும் பன்னாட்டுத் தமிழுறவு மன்றத்தை நிறுவுகின்றார்.உலகம் முழுவதும் இருந்து ஆயிரத்திற்கும் மேற்பட்ட தமிழ் உறவுகளுக்கு வரவேற்பு நல்கியுள்ளார். பத்திற்கும் மேற்பட்ட பன்னாட்டு மாநாடுகளை நடத்திச் சாதனை படைத்துள்ளார். திருக்குறத் தேசிய நூலாக்க வேண்டுமெனப் போராடி வருகின்றார்.

கடந்த ஐம்பது ஆண்டுகளாக ‘தமிழ்ப்பணி’ என்ற இதழை நடத்தி வருகின்றார். பேச்சினிலும் மூச்சினிலும் தமிழாகவே வாழ்ந்து வருகின்றார்.திருவள்ளுவர், கவியரசர், பூங்கொடி, ஆண்டவர், தமிழ்மணிகண்டன் எனத் தம் பிள்ளைச் செல்வங்களுக்கு நல்ல தமிழ்ப்பெயர்களைச் சூட்டி சிறந்த எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றார்.

அய்யா பெருங்கவிக்கோ வா மு சேதுராமன் அவர்களை முதன் முதலில் ஆறாம் பன்னாட்டுத் தமிழுறவு மாநாடு கோலாலம்பூரில் நடைபெற்ற போது சந்திக்கும் வாய்ப்புக் கிடைக்கப் பெற்றேன். தொடர்ந்து அய்யா பெருங்கவிக்கோ வா மு சேதுராமன் அவர்களை சென்னையில் நடைபெற்றஉலகத் தமிழ் ஆசிரியர் மாநாடுகளிலும், மியான்மாரிலும் சந்தித்து அளவளாவும் வாய்ப்பு பெற்றேன். தொண்ணூறாம்  அகவையை எட்டிப்பிடிக்கும் நிலையிலும் தமிழ் உணர்வோடு சளைக்காது பணியாற்றி வரும் அப்பெருமகனாரின் நெஞ்சுரம் கண்டு வியக்கிறேன்.

அய்யா பெருங்கவிக்கோ வா மு சேதுராமன் அவர்கள் எல்லா நலமும் வளமும் பெற்று நீடுவாழ்கவெனதமிழன்னையை இறைஞ்சுகின்றேன்.



பன்னாட்டுத் தமிழுறவு மன்றத்தின் சார்பில் மலேசியா முத்தமிழ்ப் படிப்பகத்தின் தலைவருக்குப் பாராட்டு விழா

# குவலயமெங்கும் குறள்நெறி பரப்பும் நான்கு இணைய இதழ்கள்













ஆண்டுக் கட்டணம் வேண்டாம்!

நன்கொடை வேண்டாம்!

படியுங்கள்!பகிர்ந்திடுங்கள்!

anjal@kuralvirtual.com என்னும் மின்னஞ்சலுக்கு

உங்கள் மின்னஞ்சல் முகவரி அல்லது

புலன எண் தெரிவித்தால் போதும்!

